# குறும்புக் கவிதைகள்



தமிழ்த்தேனீ

தமிழ்க் கமலம் பதிப்பகம்

# குறும்புக் கவிதைகள்

### தமிழ்த்தேனீ

தமிழ்க் கமலம் பதிப்பகம்

சென்னை -இந்தியா

# உள்ளடக்கம்

# குறும்புக் கவிதைகள்




ஆசிரியர் – தமிழ்த்தேனீ – rkc1947@gmail.com

மின்னூலாக்கம் – அட்டைப்படம் – தமிழ்த்தேனீ

# குறும்புக் கவிதைகள்

***" கவிதை "***

மேகத்தின் இடைவெளிகளில் கதிர் பரப்பி ஒளிக்கதிர்களாய் தோன்றுவது கவிதை. ஜன்னல் வழியே ஒளி வெள்ளமாய்ப் பெருகி வருவது போன்றது கவிதை. மேற் கூறையின் இடைவெளிகளில்

ஊடுருவி வரும் ஒளிக்

கோலங்கள்தான் கவிதை.

ஒரு புள்ளியில் தொடங்கி முழுமை பெறும் கோலம் போன்றது கவிதை. சிற்றுளியின் வண்ணத்தால் சிற்பியின் எண்ணத்தால் கற்பனையால் விளையும்

சிற்பம் போன்றது கவிதை.

கவிதை எனும் சொல்லிலேயே கற்பனை விதை அடங்கி இருக்கிறது. கருத்துக்களை விதைப்பது கவிதை. விதை நெல் என்பது உழவனின் பெருஞ்செல்வம். விதை என்றாலே நல்லபயிரின் மூலம். அத்தகைய பெருஞ்செல்வம் வேண்டுமானால் விதையைப் பாதுகாத்து வைக்க வேண்டும்.அது போல் கவிஞர்களுக்கு கருத்துக்கள்தான் பெருஞ் செல்வம், அந்த விதை போன்ற கருத்துக்களை மன ஆழத்திலே பாதுகாத்து வைத்தால்தான் அவ்வப்போது எடுத்து விதைக்க முடியும். விதைத்தால்தான் கவிதைப் பயிர் வரும்.கருத்துக்களுக்கு உயிர் வரும். கற்பனாவாதியின் மூளையில்ஏற்படும்

மின்னல் திரட்டுதான் கவிதை.

மனதிலே கற்பனை ஊறி ஊடுருவும் போது மழையாய்ப் பொழிவது கவிதை. இசையாய் நாதமாய் தாளமாய் ஒலிப்பது கவிதை.மனதைப் புதுப்பிக்கும் உற்சாக பானம்தான் கவிதை.

உடலை மெருகேற்றுவது கவிதை.

ஆத்மாவை இன்புறச் செய்வது கவிதை.

கள்ளிருக்கும் மலர்களிலெல்லாம் காமுற்று குடைந்து உள் புகுந்து அக்கள்ளை மாந்திக் குடித்து வாழ்வின் இனிய ரசமாக மாற்றிக் குழம்பாக்கி அந்தக் குழம்பை அமுதாக்கி தேனாக தேனடையில் சேர்த்து வைத்து பாதுகாத்து அளிக்கும் தேனி. அந்தத் தேனடைதான் கவிஞன் என்றால்.அந்தத் கவிஞன் தன்னைத் தானே உணர்ந்து பிழிந்து சாறாக்கி

வடிந்தூறும் தேன்தான் கவிதை.

கனகமுலைதனைப் பார்த்தவுடன் குழந்தையின் வாயிலே ஊறும்உமிழ் நீர்தான் கவிதை. இடியுண்ட மேகங்கள் மேகங்கள் கருக்கொண்டு தாய்மை எனும் உருக்கொண்டு கருணை பெருக்குண்டு

பொழியும் மாரிதான் கவிதை.

அலைகடலின் ஆழத்திலே வாய் திறந்து ஒரு துளி நீரை உட்கொண்டு வாய் மூடி மௌனம் காத்து சத்தாக்கி உருவாக்கி உருண்டு திரண்டு வெண்மையின் ப்ரதிபலிப்பாய் வெளிக்கொண்டு

ஒளிர்கின்ற முத்துதான் கவிதை.

சொற்களை விதைத்து வெளிவருவது கவிதை என்றாலும் கருப்பொருளாய் ஒரு கருத்தை விதைத்து வெளிவருவதுதான் கவிதை என்னும் அங்கீகாரம் பெறும் விதை

அதுதான் கவிதை.

# நன்றி

இந்த " குறும்புக் கவிதைகள் " நூலை சிறப்பாக வெளியிட உதவிய Free Tamil e Books குழுவினருக்கும் எனக்கு பலவகையிலும் உதவியாய் இருந்த திரு T. Shrinivasan அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

அன்புடன்

தமிழ்த்தேனீ

# குறும்புக் கவிதைகள் 1

**வசியம்**

வார்த்தைகளில் தேன் தடவும் வசியம்

வாழ்க்கைக்கு என்றும் அவசியம்

**ஞானம்**

**தியானத்தில் ஆழ்ந்தும்**

**மூழ்காமல் மிதப்பவனே ஞானி**

கணவன்

ஒரு வேளை இவன்தானோ

இது பதினெட்டாவது முறை

**நான்**

உன்னை ஓட விட்டு உன் பின்னால்

நீ ஓடு  உன்னை நீ உணர்வாய்

**எச்சரிக்கை**

நிழல் மட்டுமல்ல கிளையும் விழும்

மரம் மட்டுமல்ல மனமும் முறியும்

**தமிழ்**

செந்தமிழ் வளர்க்க தொலைக்  காட்சி

ஆங்கிலத்தில் சூரியன்

**தூது**

இதயத்தின் காதலை இதழால் தூது விட்டேன்

கைகளால் தாங்குகிறாள் இதயத்தை

**கொசு**

இனிமையாய் காதருகில் ரீங்காரம்

“ இனிய இரவு “

கிசுகிசுத்தது ஒரு பெண் குரல்

# குறும்புக் கவிதைகள் 2

**தீண்டாமை**

இறந்தது வெட்டியான் ஆயினும்

தோள் கொடுக்கத் தயார்

காரியம் முடிந்ததும் குளிப்பேன்

அது தீண்டாமை அல்ல சுத்தம்

**பாமரன்**

பட்டிக்காட்டு மாயை நீக்கி

பட்டணத்து சூட்சுமங்கள்

சொல்லிக் கொடுத்தேன் என்னைப்

பட்டிக் காட்டான் என்கிறாய் நீ

**தியானம்**

ஒருமுகப்படுத்தி ஒற்றைப் புள்ளியில்

குவித்து இரு கை தொழுது

இணக்கமாய் இருக்கும் மனதே ஆழ்நிலை உலகம்

**நாகரீகம்**

நாகரீகம் வளர்ந்தது சிந்து நதிக் கரையா

காவிரிநதிக் கரையா விவாத மாநாடு

தொடருகிறது சிங்காரச் சென்னைக்

கொசுக்கள் மணக்கும்

கூவம் நதிக்கரையில்

**பருவம்**

பெண்கள் மட்டுமல்ல இப்போதெல்லாம் கணிணி

கூட சீக்கிரம் வயதுக்கு வந்து விடுகிறது

நயகரா என்று தட்டச்சு செய்தால்

வயகரா என்று எழுதுகிறது

# குறும்புக் கவிதைகள் 3

**முத்திரை**

முத்திரை பதிக்க ஆசைதான்

முதலில் தாள் பதிக்க வேண்டுமே

யோசிக்க வேண்டும்

முத்திரைத்தாள் பதிக்கிறார்கள்

சுயேச்சையாய் அரசுக்கு எதிராய்

**முத்தம்**

ஒரு ரகசியமான முத்தத்துக்கு எத்தனை

யுத்தம் செய்திருக்கிறேன் நான்

இன்று  இலவசமாய் கொடுக்கிறாய்

முத்தம் ஏனோ இனிக்கவில்லை

**விஞ்ஞானம்**

மார்ச் மாதத்தில் மழை வலுத்தது

அபசாரம் என்றார்கள் ஆன்மீகவாதிகள்

பருவ மாற்றம்  ஓசான் ஓட்டை விழுந்ததனால் என்கிறார்கள்  விஞ்ஞானிகள்

**விட்டில் பூச்சி**

விட்டில் பூச்சிகள் விளக்கொளி மறைக்குமா

தொட்டில் குழவியும்  தோகையை விரிக்குமா

எட்டில் தானாய்ப் பருவம் முகிழ்க்குமா

மொட்டில் மலர்களும் மலர்ந்து விரியுமா

**சத்தம்**

முத்தத்தின் சத்தம் ஒலிமாறும்

முறைமாறும் இடம் மாறும்

முறை சார்ந்த  முறையோடு

முத்தத்தின் சத்தம் இடம் மாறும்

ஒலி மாறும்

# குறும்புக் கவிதைகள் 4

**ஊழல்**

ஊழல்  பட்டியலில் இந்தியாவுக்கு

88 வது இடமா அதிலும் முதல் இடம் இல்லையா?

**கனவு**

செத்துப் போனேன்  பயந்து விழித்தேன்

நல்ல வேளை கனவுதான்  நிம்மதியாய்க்

கண்களை மூடினேன்.

**முடியாது**

என்னால் முடியாதென்று

சொல்லிவிடத்தான்

நினைக்கிறேன்

என்னால் முடியவில்லை

**நல்ல வேளை**

இலையுதிர் காலமும் பூவுதிர்காலமும்

பழமுதிர்க் காலமும் இயற்கைதான்

நல்ல வேளை பூசணி கொடியில் காய்க்கிறது

**ஏக்கம்**

ஒரு புகைப் படத்திலும்

உன் அருகில் நான் இல்லையே

ஓ என்றுமே  நான்

புகைப்படக்காரன்தான்

# குறும்புக் கவிதைகள் 5

**மனவியல்**

வெறித்த  பார்வைகளுக்கு

நடுவே ஒரு தவிர்த்த  பார்வை

அதனால்  தவித்த  பாவை

**காபரே**

நிர்வாணச் சரக்கை மலிவுச்  சந்தையில் தவணை

முறையில் விற்கும் மொத்த வியாபாரி

**வயிறு**

அம்மன் வேஷம் கலைத்துவிட்டு

அடுத்த வேளைச் சாப்பட்டுக்கு ஐந்து நட்சதிர ஹோட்டலின்  படுக்கை அறை

**பெருமிதம்**

வறுமைக் கோட்டின் கீழே இருக்கிறாயா

கவலைப் படாதே-ஐ நா சபையின்

புள்ளி விவரத்தில் நீயும் சேர்க்கப் பட்டிருக்கிறாய்

**பொருமல்**

பெற்றோருக்கு  எதிராய் அன்னிய

மதத்தில் காதலிக்கும் அத்தனை

வாரிசுகளும்    தீவிரவாதிகளே

# குறும்புக் கவிதைகள் 6

**யதார்த்தம்**

விரலுக்கு மை இட்டு அழகு
பார்ப்பார்  பதவி வந்தவுடன்
த்ரோணர் போல்
விரலைக் கேட்பார்

**ஆர்வம்**

புகைப் படக்காரரே  சற்றுப்
பொறுங்கள் உடனே பதிவு
செய்து பார்க்க இது புகைப்
படமல்ல கர்ப்பம்

**போதை**

போதைக்கும் எனக்கும்
போட்டியொன்று முளைத்தது
யாரை யார்  முதலில்
நிறுத்துவதென்று?

**பிறப்பு**

உலகிலேயே உயர்ந்தவன்
தொழிலாளி ( லேபர் )
அதனால்தான்  பிரசவ  வலியை
லேபர் பெயின்   என்கிறார்கள்

**உண்மை**

அப்பா நீங்க பொய் சொல்லுவீங்களா
என்று கேட்டது குழந்தை
இல்லையென்று சொல்லுவதா
ஆமென்று சொல்லுவதா
குழப்பத்தில் இருந்தேன் நான்

# குறும்புக் கவிதைகள் 7

**மகிழ்ச்சி**

நான்  முட்டாள் என்று

நிரூபிக்கப்  படும் போதெல்லாம்

மகிழ்கிறேன்  ஏனென்றால்

பல  அயோக்யர்களை பற்றிய

என்  அனுமானம் சரியாகவே

இருந்திருக்கிறது

**ஆத்திகம்**

என்னையும் படைத்து

உன்னையே இல்லை

என்று சொல்லும்

நா வன்மையும் எனக்களித்த

கடவுளே  நீ  இல்லை

இல்லை இல்லவே இல்லை

**படைப்பு**

ஒரு முறை விதைத்தேன்

உலகம் வளர்ந்தது

பல முறை அழித்தேன்

ஒன்றும் ஆகவில்லை

**வருத்தம்**

என் வயது  55

35 வயது என்று

சொன்னால் நம்புகிறார்கள்

வருத்தமாய் இருக்கிறது

35 வயதுக்கரர்கள் என்

போலவா  இருக்கிறார்கள்

**வித்தை**

பாம்புக்கும் கீரிக்கும்

சண்டை விடுவதாக

வெகு நாட்களாக ஏமற்றிக்

கொண்டிருக்கிறான்

ஒரு வித்தைக்காரன்

பாம்புக்கும்  பாம்புக்கும்

கீரிக்கும்   கீரிக்குமே

சண்டை மூட்டிக்

கொண்டிருக்கிறான்

அரசியல்வாதி

# குறும்புக் கவிதைகள் 8

**நீதி தேவதை**

நீதிபதி தர்மலிங்கம்

நீதிபதி தர்மலிங்கம்

நீதிபதி தர்மலிங்கம்

நீதிமன்ற டவாலி மூன்று

முறை கூப்பிட்டார்

குற்றவாளிக் கூண்டில்

நீதிபதி தர்மலிங்கம்

**பொட்டு**

என் மனைவி சுமங்கலிதான்

நானும் உயிரோடு இருக்கிறேன்

நிலைக் கண்ணாடியிலும்

குளியலறைக் கதவுகளிலும்

இருக்கும் ஒட்டும் நெற்றிப்

பொட்டு நினைவு படுத்துகிறது

**வேலைக்காரி**

அக்கறையாய்ப் பார்த்துப் பார்த்துச்

சமைத்தாயிற்று நல்லவேளை

வேலைக்காரிக்கு பிடித்த

உணவு வகைகள் மீதமானலும்

கவலை இல்லை

**போதை**

தண்ணி அடிச்சு தண்ணி

விலகாது நல்ல பழமொழி

தண்ணி அடிச்சா எல்லாமே

விலகிடும் அதுதான் சுனாமி

தண்ணி அடிக்காதீங்க

**பாசம்**

பெற்றவர் மேல் பாசமாய்

இருப்பதே தகுதியாய்

காதலித்தாள் பின்

அதே காரணமாய்

தனிக் குடித்தனம்

**நாகரீகம்**

சிந்து நதிக்கரை நாகரீகம்

காலமாற்றமடைந்தனால்

கூவம் நதிக் கரையில்

கொசுக்களுடன் வாழுகிறோம்

# குறும்புக் கவிதைகள் 9

**நீதி**

போலீஸ்காரர்களுக்கு அரசாங்கம்
சம்பளம் கொடுக்கிறது ஆனால்
நாங்கள் தான் வேலை கொடுக்கிறோம்
அதனால் அவர்களுக்கு அதிகாரிகள்

**இப்படிக்கு**
**குற்றவாளிகள்**

**காட்டுச் சிறுத்தை**

வேட்டுகள் முழக்கி நெருப்பைக் காட்டி
காட்டில் பிடித்த கடுஞ்சிறுத்தை தனையே
கூட்டில் அடைத்து மாட்டு வண்டியிலேற்றி
நாட்டிற்கழைத்து வந்து நட்ட நடு கூடாரத்தில்
வேடிக்கை காட்டுவதால் மனிதர்கள்

**ஞானோதயம்**

ஈக்களோடு ஈக்களாய் குப்பை தொட்டியில் வாசம்
ஒரு திடீர் ஞானோதயம்
தேனீயாய் மாரி பூக்களோடு வாசம்
தமிழ்த் தேனீயாய் மாரி தமிழ்ப் பூக்களோடு வாசம்
தமிழ்தான் என் ஸ்வாசம்

**தலையணை**

தலையணையைப் பெண்டாட்டியாக பாவித்து
கட்டியணைத்துப் படுப்பவன் பிரும்மச்சாரி
பெண்டாட்டியை தலையணையாகப் பாவித்து
கட்டியணைத்துப் படுப்பவன் கல்யாணம் ஆனவன்

**ஞானம்**

என்னை ஞானியாக்கியவர்கள்
என் அம்மாவும், என் மனைவியும்
ஒவ்வொரு வெற்றி பெற்றவர்
பின்னாலும் ஒரு பெண் இருக்கிறாள்
புரிந்து கொள்ளாமல்

# குறும்புக் கவிதைகள் 10

**கல்வி**

சீக்கிரம்   டிரஸ் போட்டுக்கோ

ஸாக்ஸ் போடு  ஷூ போடு

டை  கட்டிக்கோ டிபன் சாப்பிடு

ஒருவாட்டி சொல்லும்போதே மனப்பாடம்

செய்யணும்  புரியுதா

கிளம்பு  கிளம்பு  நேரமாச்சு

ஷாட் ரெடி இயக்குனர்  வந்துட்டார்

**உறவு**

கசடு தேங்காத வெண்ணெய்

அசடு இல்லாத   வெகுளி

வெட்ட இயலாத  உறவு

ஒட்ட இயலாத துறவு

கரை தாண்டாத அலைகள்

அலை  தீண்டாத   கரைகள்

உதடு ஒட்டாத கவிதை

**விடுமுறை**

பள்ளியில் படிக்கும் போதும்

வேலை செய்த நாட்களிலும்

விடுமுறை எனும் வார்த்தை

செய்த மாயம் எத்தனையோ

விடுமுறை ஆசை அதிகமாக

முற்றிப் போன நிலையில்

விருப்ப ஓய்வு எடுத்துக் கொண்டேன்

விடுமுறை இப்போது தண்டனையாய்!!

**கருவிழி**

விரித்த கரு விழியால் அளந்தது  குழந்தை
கையகல இடைவெளியில்  கண் திறந்து
மெய்நிறைந்த  இதழ் விரித்து மண்ணளந்து
வியப்பின் குறியீட்டாய்  பொக்கை வாய் திறந்து
கண்ணிமைக்கும்  கணநேர இடைவெளியில்
இமை மூடித் திறந்தது ஒரு முறை வையமுழுதும்
அதன் கருவிழியில் நிறைந்து ஒளிர்கிறது
அம்மாவின் முந்தானை மட்டும் கைவிடாமல்

# குறும்புக் கவிதைகள் 11

**பிரும்மா**

ஆணினத்தைக் கொல்ல

ஒரு படைப்பு

பெண்ணினத்தைக் கொல்ல

ஒரு படைப்பு

ஆண்கடவுளும் பெண்கடவுளும்

இணைந்து படைத்தார்

ஒரு ஆண் ஒரு பெண்

ஒரு ஆணினம் ஒரு பெண்ணினம்

இரு படைப்புகளும் விடைத்தன

புடைத்தன காதலித்தன

மணந்தன புணர்ந்தன படைத்தன

மீண்டும் இரு படைப்புகள்

**ஏன்**

சமாதானப் புறாக்களுக்கு

சண்டை உண்டு

பருந்துகளுக்கு பாசம் உண்டு

கழுகுகளுக்கு நேசம் உண்டு

புலிகளுக்கு கருணை உண்டு

பாம்புகளுக்கு இணக்கம் உண்டு

நரிகளுக்கு நியாயம் உண்டு

நாய்களுக்கும் இரக்கம் உண்டு

இந்த மனிதர்களுக்கு

இடையே மட்டும் ஏன் ?

**வாலி**

யாரெதிர் வந்தாலும் பாதி பலம் வாங்கும்

பார் புகழ் கவிஞன் ஸ்ரீரங்கத்து வாலி

நேர் எதிர் மனிதரையும் நேயத்தோடணுகி

சீர் மிகு சொற்களால் மனம் இளக்கி பாவுலகுத்

தேர் ஏறி நின்றான் திருமால் அரங்கன்

தன் பாதம் தன்னில் நேராக சென்றடைந்தான்

அவர் புகழ் வாழ அடியேனும் தொழுகின்றேன்

# குறும்புக் கவிதைகள் 12

**கடிவாளம்**

காற்று நிரப்பப்பட்ட பலூன்கள்

பறப்பதற்கு ஆயத்தமாய்

பறக்கும் வான வெளியில்

பலரின் கற்பனை சிறகுகளாய்

எங்கு போய் இறங்குமோ இலக்கு

பலூனுக்குத் தெரியாது அதன்

கடிவாளம் யார் கையில்

**ஒற்றைச்சொல்**

திறந்த கதவு

ஜன்னலில் துணி

வரவேற்பு மிதியடி

தயாராய் செய்தித்தாள்

உதிர்ந்த காலணி

வயோதிகம் தாங்காத

வெற்று நாற்காலி

கறை படிந்த தரை

யாரும் வர விரும்பாத அறை

கனத்த நெஞ்சம் காரணம்

அந்த ஒற்றைச் சொல்

**வறுமை**

உள்ளங்கையில் பட்டுத் தெறித்து

உள்ளொளி பெற்று ஒளியாய்ப்

பொறிந்து வெண்மை ஒளியாய்ச்

சிதறி எழுந்து நான் உள்ளே

வந்தால் முழுதும் நிரம்பிய

அணைக்கட்டும் உடைந்தே

தெறிக்கும் என்றே உணர்த்தும்

ஒரு துளி தண்ணீர் – அது

வெள்ளை உள்ளம் கொண்டே

வாழுகின்ற ஏழையின் கண்ணீர்

# குறும்புக் கவிதைகள் 13

**தேவதை**

கதிர் விரிக்கும் சூரியன்

கையில் உள்ள பூவில்

பூவிதழ் ரசிக்கும் குழந்தை

இயற்கை ரசிக்கும் பூமி

மணம் பரப்பும் மலர்கள்

வெய்யக் கதிரோன் விரிக்கும் கதிர்கள்

இதழ் பதிக்கும் தேவதை முத்தம்

**அசை போடுவோம்**

அசைபோட ஆயிரம் நினைவுகள்

மறுதலிக்கும்  சுயநல மனது

அன்றாட வாழ்க்கையிலே ஆயிரம்

போராட்டம்  மனைவியா அம்மாவா

சுட்டிக் காட்டும் மனது

நமக்கேன் வம்பு பேசாமல் இருக்கலாம்

அதுதான் புத்திசாலித்தனம்

மனைவி என்னும் தளையில்கட்டிய

மாடு நான் நியாயம் யோசிக்கத்

தயங்கும் தொடை நடுங்கி நான்

மாமனார்  அளித்த சீரும் மனைவி

என்னும் சாதனமும்  முக்கியம்

அம்மா என்றும் சபிக்க மாட்டாள்

அது ஒரு ஆறுதல்!

# குறும்புக் கவிதைகள் 14

**காதல் தேவன்**

இரு பால் இனங்க ளிரண்டையும்

இல்லற நுகத்தடியில்  பூட்டி

உல்லாசத்  தேர்ப் பயணம்

செய்கிறான் மன்மதன்

ஒரு பால்,ஒருகால்  மிரண்டாலும்

பயணம் தடம் மாறும்,தடுமாறும்,

தடம் மாறும் பயணங்களை

இலக்கு தப்பா மன்மத பாணம்

தொடுத்து ,காதல் கடிவாளம்

தனை இழுத்து சீராக்கி

ஓடவைக்கிறான் மன்மதன்

காமதேவன் அல்ல  காதல் தேவன்

**விடுமுறை**

பள்ளியில் படிக்கும் போதும்

வேலை செய்த நாட்களிலும்

விடுமுறை எனும் வார்த்தை

செய்த மாயம் எத்தனையோ

விடுமுறை ஆசை அதிகமாக

முற்றிப் போன நிலையில்

விருப்ப ஓய்வு எடுத்துக் கொண்டேன்

விடுமுறை இப்போது தண்டனையாய்

**<u>வெண்பாக் கவிதைகள்</u>**

**கணினி**

அணிமா முதல்  அட்டமா சித்திகளும்

பிணியிலாப் பெருவாழ்வும்  கிட்டும்

கணிணி கையடக்கி  உலகுமேய விரல்

நுனிக் கணியெலி இன்றுண்டு காண்

**தந்தை**

முந்தைப் பிறப்பின் முழுப்பயனாய் இப்புவியில்

எந்தைப் புதல்வனாய் இங்குதித்தேன் – விந்தையே

சிந்தனை மேம்படச் செந்நெறி போதிப்ப(து)

எந்தந்தை காட்டும் வழி.

**காசு**

வீசிடும் காற்றும்  மழையும் இயற்கையாய்

பேசிடும் மனிதர் காசுக்கு விற்கிறார்

மனிதரின் ஆசைக்கு தெய்வமும் தோற்குமா

காசினியில் எல்லாமே காசு.

# குறும்புக் கவிதைகள் 15

**காதல்**

நீ யாரென்று உண்மையைச் சொல்
நான் யாரென்று உணர்ந்து கொள்
நாம் பேசிக் காதலித்து மணக்கலாம்
பிறகுதான் வாழ்க்கை இனிக்கும்

**உயர்வு**

செருப்பு தைக்கலாம் செஞ்சாந்து பூசலாம்
பொருப்புணர்ந்து நெருப்பின் அனலில்
வெந்து சமைக்கலாம்  மனிதம் வளர்க்கலாம்
செய்தொழிலில் இல்லை உயர்வு !

**செய்தொழில்**

பொய்யும் புரட்டும்  புனைசுருட்டும்  தருகின்ற
செல்வம்  சேர்த்து  மகிழ்வாய் வாழுகின்றார்
உழைப்போரைப் பார்த்து  எள்ளி நகையாடுகின்றார்
செய்தொழிலில் இல்லை உயர்வு !

**சூழ்வெளி**

சூழ்நிலை வெப்பத்தால் ஆழ்கடல் பொங்கிப்
புரண்டு சீறி அழிக்கும் பெருமலையும் உருகியே
சூழ்ந்தே அழிக்கும் போவதெங்கே பூவை விட்டு
சூழ்வெளியைச் சுத்தமாய் வை !

**கண்ணியம்**

கண்டவுடன் காதலால் காமமேறும் போதிலும்
தீண்டிவிடும் நாகத்தின் விஷமேறும் போதிலும்
தாண்டிவிடு மனதடக்கி அவள்தானே  சக்தியே
பெண்டிரைக் கண்ணியமாய்ப் பேண்

**முதிர்ச்சி**

தத்து பித்தென்று உளரித் திரிவோரும்
பித்து பிடித்தாற் போல் மயங்கி யலைவோரும்
பித்தரில்லை பேயரில்லை சித்தராயும் இருப்பர்
முதிர்ந்தே பழுத்த பழமாய்

# குறும்புக் கவிதைகள் 16

**இன்பம்**

சொல்ல முடியவில்லை பொல்லாத பூமியில் !

நல்லவர் வாழும் நலமான தொல்லுலகாய்

கள்ளமும், தீமையும் இல்லாது போனால்தான்

எல்லாமே இன்ப மயம்

**இலக்கணம்**

இலக்கணக் கட்டுக்குள்ளே அடங்காமல் இயல்பாய்

எக்கணம் நினைத்தாலும் வக்கணையாய் வார்த்தைகள்

காரிருளில் விளக்காய் தக்கனவாய் அமைந்து

வரும் வெண்பா அல்ல என்பா

**தொடுப்பு**

உடுக்கை யிடைபிடித்து உறு தொழில் மாற்றி

இடுக்கைக் களையும் எண்ணம் போற்றி

நடுக்கை விரல் கொண்டு நால்வித ஓசைசெய்து

தமிழ்த் தொடுப்பை உறுதி செய்

**தனித்திரு**

ஆடியிலே கருத்தரித்தால் சித்திரையில் பிள்ளைவரும்

ஆடிமாதத்துக் கழைக்காத மாமனை தேடிப் பிடித்து

செருப்பாலடி என்றோர் பழமொழி – ஆடவனே

ஆடிமாதம் தனித்திரு விழித்திரு

**இல்லறம்**

இதமாக பெண்பார்த்து இனிப்பாய் கேசரி

பதமாக சுவைத்தேன் நீ தந்த நீரேந்திக்

கொப்பளித்தேன் அதன்சுவை அற்புதம்

புதன் கிழமை கலயாணம் கொட்டு மேளம்

**வெண்பா**

வெண்பா எழுத வேண்டினார் நானுமே

வெண்பா எழுத முனைந்தேன் –

கருவிளம் கூவிளம் தேமா புளிமா

என்றெல்லாம் இலக்கணமாம்

# குறும்புக் கவிதைகள் 17

**காசுமலர்**

காசுமரம் காசுச்செடி காசுக்கொடி காசுக்காய்

காசுப்பழம் காசு விதை  காணவே – முடியவில்லை

கள்ள நோட்டும் அடிக்கவில்லை அப்படியும்

காசுமலர் நாளும் பிறப்பு

**ஆரோக்கியம்**

பிஸ்ஸாவும் பர்கரும் வெளிநாட்டுச் சாக்லெட்டும்

தப்பாமல்  பெறுவார்   கர்ப்பிணியும்  தப்பாதே

மூப்பும் உடல்  பருமன்   முழுவீச்சில்

செப்பாமல்  நான் செய்ய

**சுகப்ரசவம்**

சிசேரியன் வேண்டாம் சுகமாய் பிரசவம்

வைத்தியர் சொன்னாலும் ஏழரை ஒன்பது

ராகுகாலம் வேண்டாத தெய்வமில்லை ஒன்பது

மணிக்கு மேல் பிறக்க வேண்டி வலி

கண்டேன் காலைமணி ஏழரை

**கடவுள்**

யேசுவிடம் தூங்காமல் விழித்திடும்  நிர்வாணம் கடவுளென்றார் புத்தன் என்றேன் உருவமில்லா வெட்ட வெளிதான் கடவுள் என்றார் அல்லா என்றேன் புத்தனிடம்  எல்லையில்லாப் ப்ரபஞ்சம் அத்தனையும்அணுக்கி நுணுக்கி அணுவிலே வைத்திருக்கிறேன்என்றேன் ஆதிமூலத்திடம் கடவுளர் ஒற்றுமையாய்விருந்தினர்  விசா முடிந்ததும் கிளம்பு என்கிறார்

**பருவம்**

கடலலை மேலே ஒரு   பாவை

உடலை மறைக்க ஆடை  தேவை

பாவையின் உடலை தழுவும் அலை

கலைஞனின் கண்ணுக்கு காவியம்,

இளைஞனின் கண்ணுக்கு இளமைக் காவியம்

அலை முழுதும் வடியாதென்ற நம்பிக்கை

இயற்கை மாறினாலும் மாறாத  வளைக்கை

காப்பாற்ற காதலன் வருவானோ

களவாட காமுகன் வருவானோ

காலம் தான் சொல்லும் பதில்

# குறும்புக் கவிதைகள் 18

**முழு மனிதன்**

முன்னேறு திடமாய் முன்னேறு
முன்னேறு போகும் பாதையில்தான்
பின்னேறு பின் தொடரும்
கண்ணேறு பட்டாலும் கலங்காமல்
கள்ள மனம் கொண்டோரின்
தடைகளைத் தாண்டி முன்னேறு
முழு மூச்சில் விண்ணேறும் உனது சக்தி
உள்ளுணர்ந்து முன்னேறு பண்பாடும்
புகழ் பாடும்  விண்ணெட்டும் புகழ் கூடும்
தீந்தமிழின் திறம் கொண்டு திடமான
மனம் கொண்டு முன்னேறும்
மானுடனே  ஆவான் முழு மனிதன்

**நாடகம்**

மோனத்து இருந்த முன்னோன் கூத்தில்
உடுக்கையில் பிறந்தது ஓசையின் சுழலே
ஓசையில் பிறந்தது இசையின் உயிர்ப்பே
இசையில் பிறந்தது ஆட்டத்து இயல்பே
ஆட்டம் பிறந்தது கூத்தினது அமைவே
கூத்தில் பிறந்தது நாட்டியக் கோப்பே
நாட்டியம் பிறந்தது நாடக வகையே
கூத்த நூலைப் பார்த்து யாத்த நூல் கீழே
மோனத் தவமிருந்து மூழ்கி உள்கிடந்து
ஞானத் தவமிருந்து  தனித்தே உள்கடந்து
ஒன்றித் தழைத்தே உள்ளுருவாகி வளர்ந்து
ஓங்காரநாதம் ஓங்கிப் புறப்பட்டே  உள்
இருந்து ஒலித்துத்  தொடங்கி நாடகம்
பிறந்தது அசைவின் மொழியே
அசைவு பிறந்தது  மொழியின் வகையே
மொழி பிறந்தது மனதின் பிம்பமே
மனமொழி என்பது இதயத்தின் ஒலியே
மனம் என்பது இதயத்தின்  இருப்பே

இருப்பு என்பது  இறைவனின் அறையே

அறை என்பது அன்னையின் கருவே

கரு என்பது ககனத்தின் விதையே

விதை என்பது ககனத்தைப் பிளந்து

வெடித்துக் கிளம்பி காற்றை உள்

வாங்கிய விருட்ஷத்தின் அணுவே

அணுவென்பது ஆதிமூலமே

# குறும்புக் கவிதைகள் 19

**விருட்ஷம்**

சிறு வயதில் என் அம்மா
ஒரு விதை கொடுத்து மண்ணில்
இடச் சொன்னார்,செடி ஒன்று வளருமென்றாள்
தினமும் தவறாமல் நீர் விடச் சொன்னாள்
செடி ஒன்று வளருமென்றாள்
என் ஆர்வச் செடி வளர்த்தாள்
பள்ளிக்குச் செல்லுமுன் அம்மா இதெப்போது
வளருமென்பேன் பள்ளிக்குச் சென்றாலும்
அகலவில்லை பசுமையையாய்ச் செடி
நினைவு என் மனதில் சில நாளில்
அந்த சிறு விதை மண் பிளந்து சிறிதாக
முளை விட்டு வெளியே தலை நீட்டியது
அதிசயமாய்ப் பார்த்தேன் அம்மாவிடம்
கேட்டேன் மண் பிளக்க சிறு விதைக்கு
பலம் எப்படி வந்ததென்று
அதுதான் மண்ணின் மகத்துவம்
தன்னைப் பிளக்க தானே பலம் கொடுக்கும்
அதுவே வகை செய்யும் பெரு மரம் வளர
தானே பிளந்தும் வழிவிடும் அதுதான்
தாய்மை தனக்கென்று வைத்திருக்கும்
தனித் தன்மை ,தியாகம் அதன் பெயர்
என்றுரைத்தாள் என் அம்மா அப்போது
புரியவில்லை என் தாயின் அருமையும்
என் மண்ணின் பெருமையும்
என் தாரம் ஒரு மகனைப் பெற்றெடுத்து
என் கையில் கொடுத்தவுடன்
நானும் புரிந்து கொண்டேன்
நல்ல விதை விதைக்க அன்றே
பயிற்சி கொடுத்த என் தாயை
இப்போதென் தாய் மண்ணுக்கடியில்
விதைத்த விதை வாய்வெடித்து

கீழ்வழியே வேர் பரப்பி

பிடிமானம் வெண்டி எண்ணி

மண்மகளைக் கைப்பிடித்து

விண் நோக்கி வளர எண்ணி

காற்றுதனை மூச்சிழுத்து

வேருக்கு நீர் வேண்டி உள்ளுக்குள்

துளைந்து , கிளர்ந்து உள்ளோடிப்

பரவிப் படர்ந்து மண்ணிற்கு வெளியே

சிறிதாகத்தலைநீட்டி இருநிலையாய்ப்

பிரிந்து நடுவே ஒரு குருத்து விட்டு

இப்படியே இயக்கம் கொண்டு

விருட்ஷமாய் வளரும் !

**அன்புடன்**

**தமிழ்த்தேனீ**

rkc1947@gmail.com http://thamizthenee.blogspot.com

# நன்றி

சில வரிகளில் நுணுக்கமான ஆழமானகருத்துள்ள கருத்துக்களை சொல்லுதல் ஒரு கலை.ஒரு சிறிய கருவை பெருங் கவிதையாகவும் மரபுக் கவிதையாகவும் சிறு கவிதையாகவும் குறுங்கவிதையாகவும் குறும்புக் கவிதைகளாகவும் பலவடிவங்களில் எழுதலாம். படிப்பவருக்கு உடனடியாகப் புரியும் வண்ணம் எழுதுதல் திறமை.அது போல இந்தக் கவிதைகளில் மிக ஆழமான கருத்துக்கள் மிக எளிமையான தமிழ்ச் சொற்களைக் கொண்டு விதைக்கப் பட்டிருக்கின்றன. இந்தக் கவிதைகளின் ஆழம் அளவிடமுடியாதது . அறிவோம் தமிழின் சிறப்பை . இது குறுங் கவிதைகளின் கருப்பை .

என் தந்தையார் ஆர் ரங்கஸ்வாமி அவர்களுக்கும் என் தாயார் ஆர் கமலம்மாள் அவர்களுக்கும் இந்த

“குறும்புக் கவிதைகள் ” எனும் படைப்பை காணிக்கையாக்குகிறேன். – தமிழ்த்தேனீ

# FreeTamilEbooks.com - எங்களைப் பற்றி

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

எனவே ஒரு தமிழ் வாசகர் மேற்கூறிய “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகளை” வாங்கும்போது, அவரால் எந்த ஒரு தமிழ் புத்தகத்தையும் இலவசமாகப் பெற முடியாது.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால்

மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FreeTamilEbooks.com**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

**இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?**

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. www.vinavu.com
2. www.badriseshadri.in
3. http://maattru.com
4. kaniyam.com
5. blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் Creative Commons உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை
பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள்
உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : **freetamilebooksteam@gmail.com**
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G +: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலை**freetamilebooksteam@gmail.com** எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை

வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- **email : freetamilebooksteam@gmail.com**
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**Supported by**

- Free Software Foundation TamilNadu, www.fsftn.org
- Yavarukkum Software Foundation http://www.yavarkkum.org/

# உங்கள் படைப்புகளை வெளியிடலாமே

உங்கள் படைப்புகளை மின்னூலாக இங்கு வெளியிடலாம்.

1. எங்கள் திட்டம் பற்றி – http://freetamilebooks.com/about-the-project/

தமிழில் காணொளி – http://www.youtube.com/watch?v=Mu_OVA4qY8I

2. படைப்புகளை யாவரும் பகிரும் உரிமை தரும் கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் பற்றி –

கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமை – ஒரு அறிமுகம்
http://www.kaniyam.com/introduction-to-creative-commons-licenses/

http://www.wired.co.uk/news/archive/2011-12/13/creative-commons-101
https://learn.canvas.net/courses/4/wiki/creative-commons-licenses

உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமத்தை இங்கே தேர்ந்தெடுக்கலாம்.
http://creativecommons.org/choose/

3.

மேற்கண்டவற்றை பார்த்த / படித்த பின், உங்கள் படைப்புகளை மின்னூலாக மாற்ற பின்வரும் தகவல்களை எங்களுக்கு அனுப்பவும்.

1. நூலின் பெயர்
2. நூல் அறிமுக உரை
3. நூல் ஆசிரியர் அறிமுக உரை
4. உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம்
5. நூல் – text / html / LibreOffice odt/ MS office doc வடிவங்களில். அல்லது வலைப்பதிவு / இணைய தளங்களில் உள்ள கட்டுரைகளில் தொடுப்புகள் (url)

இவற்றை freetamilebooksteam@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

விரைவில் மின்னூல் உருவாக்கி வெளியிடுவோம்.

---

நீங்களும் மின்னூல் உருவாக்கிட உதவலாம்.

மின்னூல் எப்படி உருவாக்குகிறோம்? –

தமிழில் காணொளி – https://www.youtube.com/watch?v=bXNBwGUDhRs

இதன் உரை வடிவம் ஆங்கிலத்தில் – http://bit.ly/create-ebook

எங்கள் மின்னஞ்சல் குழுவில் இணைந்து உதவலாம்.
https://groups.google.com/forum/#!forum/freetamilebooks

நன்றி !